# லிட்டில் பிரின்சஸ்ஸும் பட்டாணியும்



- இந்திரா ஸ்ரீவத்ஸா

# லிட்டில் பிரின்சஸ்ஸும் பட்டாணியும்

in Publications, 2022

- இந்திரா ஸ்ரீவத்ஸா



ஒரு காலத்தில் இளவரசர் ஒருவர், பெரிய அரண்மனையில் வாழ்ந்தார். ஆனால், இளவரசர் தனிமையில் இருந்தார். அவர் உண்மையில் ஒரு இளவரசியை மணக்க விரும்பினார்.



அவர் இளவரசியைத் தேடினார். பல பெண்கள் தாங்கள் இளவரசிகள் என்று சொன்னார்கள். ஆனால், அவர்கள் யாரும் இளவரசிகள் அல்ல! இளவரசர் மிகவும் சோகமாக இருந்தார்.



ஒரு இரவு, மழை பெய்தது. இளவரசர் கோட்டைக்கு வெளியே ஒரு பெண்ணைக் கண்டார். இளவரசர் வெளியே ஓடி வந்து அவளை உள்ளே அனுமதித்தார்.



அந்த பெண் மழையில் மிகவும் ஈரமாக நனைந்திருந்தாள். அவள் உடை ஈரமாக இருந்தது. அவள் தலைமுடியும் ஈரமாக இருந்தது. அவள், தான் ஒரு இளவரசி என்று கூறினாள்!



அரண்மனை அரசி, அந்தப் பெண்ணுக்கு உலர்ந்த ஆடைகளைக் கொடுத்தாள். அவள், அங்கு இரவு தங்கலாம் என்றார். அந்த பெண் உண்மையான இளவரசிதானா என்று கண்டுபிடிக்க ராணி விரும்பினாள்!



அரசி, அந்த பெண் தூங்கப் போகும் அறைக்கு சென்றாள்.

“நான் இந்தப் பச்சைப் பட்டாணியை அவள் மெத்தையின் அடியில் வைப்பேன்”, என்றாள் அரசி. “பின், நான் அதன் மேல் நிறைய மெத்தைகள் போடுவேன்.” அரசி மேலும் கூறினாள், "அவள் உண்மையான இளவரசி என்றால், அந்த சிறிய பட்டாணியை உணர்வாள்."



அன்று இரவு, அந்த பெண் தன் அறைக்கு சென்றாள். அவள் மெத்தைகளின் மேல் ஏறி படுத்துக்கொண்டாள்.



காலையில் உணவு சாப்பிடும் நேரம் வந்தது. இளவரசி மகிழ்ச்சியாகத் தெரியவில்லை. "நீங்கள் நலமாக இருக்கிறீர்களா?", என்று அரசி கேட்டாள். “நான் என் படுக்கையில் ஏதோ உணர்ந்தேன்" என்று அந்த பெண் கூறினாள். "அது இரவு முழுவதும் என்னை எழுப்பியது."



அரசியும், இளவரசரும் மிகவும் மகிழ்ச்சியடைந்தனர்! அந்தப் பெண் மெத்தைகளுக்கு அடியிலுள்ள பட்டாணியை உணர்ந்தாள்.

அவள் ஒரு உண்மையான இளவரசிதான்!



இளவரசர் அந்தப் பெண்ணைக் காதலித்தார்!!! அந்த பெண்ணும் இளவரசரை விரும்பினாள்!!! அவர்கள் திருமணம் செய்து கொண்டு மகிழ்ச்சியாக வாழ்ந்தனர்.

